# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

ஹேவிளம்பி - புரட்டாசி - 2017 - செப்டம்பர்



26.09.2017 அன்று கோவிலூர் மடாலய வளாகத்தில் நடைபெற்ற பனைவிதை நடும் விழா

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

ஹேவிளம்பி - புரட்டாசி - 2017 - செப்டம்பர் இதழ் - 63

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G. ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

### பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்




# இறை வணக்கம்

மாலுக்குத் தங்கையென அவதரித்த திருநெல்லை
மயிலனைய சாயலாள் மேனை பெற்ற
மரகதப்பொன் மாதுமையாள் சாலி காக்கும்
வேலியென விளங்குவாள் கமலமலர்ப் பாதமது
வேண்டுமெனப் பணிந்தாரை வாழ வைப்பாள்
நஞ்சுண்ட கண்டனுக்குப் பாரி யாவாள்
நாலுமறைப் பொருளாவாள் நங்கைதிரு நெல்லையம்மை
நமக்காகச் சமிவனத்தை நாடி வந்தாள்
நம்முடைய வினையதனைப் போக்கு விப்பாள்
காலனையே உதைத்த சிவன் மருங்கி னிலே தானிருக்கும்
கன்னியிவள் நாமங்கள் பலவே யாகும்
காலடியை வணங்குவார் நன்மை காண்பார்

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்

# ஆசியுரை

**சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்**

இன்றைய காலகட்டத்திலே பலவிதமான இன்னல்கள், தவறுகள், பொய்ப்பிரசாரம், சுயநல ஆதாயங்கள் மிக அதிகமாக உணரப்பட்டு சமுதாயச் சூழ்நிலை நல்ல நிலைமையிலே இல்லை.

இதனைச் சரிசெய்வதற்கு இன்றைய இளைய தலைமுறை சில தியாகங்களைச் செய்து சமுதாயத்தை முன்னெடுத்துச் செல்ல வேண்டும். அதற்கு நல்வழி காட்டுமாறு ஆசிரியர் பெருமக்கள் மாணவர்களின் சிந்தனை, நெறிமுறைகள் நிறைந்ததாகவும், தைரியம், தன்னம்பிக்கை, தீமைகளை ஏற்காத நெஞ்சம் ஆகிய பண்புகளைக் கொண்டவர்களாகவும் வளர்த்தால்தான் இன்றைய மக்கள் சமுதாயத்தை நல்வழிப்படுத்த முடியும்.

பழைய காலங்களில் குருகுலவாசம் என்று அழைக்கப்படுகின்ற பயிற்றுமுறை பழக்கத்தில் இருந்தது. அதன் வழியாக, குரு சிஷ்ய உறவு மிகவும் வலுவுடையதாக இருந்தது. அனைத்து மாணவர்களும் குருவிற்குச் செய்யவேண்டிய நான்கு வகைச் சேவைகளையும் சரிவரச் செய்து குருவின் பூரண ஆசியோடு நல் அறம் சார்ந்த மேதகு கல்வியைப் பெற்றனர். (நான்கு வகைச் சேவைகள்: ஆத்தம், அங்கம், தானம், சிரத்தை - ஆக்கம் என்பது குருவிற்குப் பிடித்தமான சேவைகளைச் செய்தல் அங்கம் என்பது. குருவினுடைய உடல் நலத்தைப் பேணுதல். கை, கால் அமுக்குதல், துணிகள் துவைத்தல் முதலியன. தானம் (ஸ்தானம்) என்பது குருவினுடைய சொத்துகளைப் பாதுகாப்பது. குருவினுடைய ஆடு, மாடு, பயிர்கள் முதலியவற்றைப் பேணிக் காப்பது. சிரத்தை என்பது குருவை இறைவனாகவே பாவித்து அவர்கள் உபதேசங்களைச் சிரம் மேற்கொண்டு அதன்படி நடப்பது.)

இந்த வழிமுறைகளையே ஆங்கிலேய காலத்துக்கு முந்தைய சமுதாயம் நெறி முறைகளைக் கடைப்பிடித்து அறம் சார்ந்த வாழ்க்கை வாழ்ந்தார்கள். ஆங்கிலேயர் காலத்திலே இந்தக் கல்வி முறை தொடர்ந்தால் தங்களுடைய ஆளுமையை இந்தியச் சமுதாயத்தின்

பேரில் சுமத்த முடியாது என்பதற்காகவே மெக்கலே கடந்த மூன்று நூற்றாண்டுகளாக நடைபெற்று வருகின்ற பள்ளிக் கல்வி முறையை அறிமுகப்படுத்தினார். அதன் வழி நம்முடைய பண்பாடு, கலாச்சாரம், அறம் சார்ந்த வாழ்க்கை யாவும் கொஞ்சம் கொஞ்சமாகச் சிதைந்து போயின.

தற்போதைய காலகட்டத்திலே நாம் மீண்டும் எழுந்து நம்முடைய சமுதாயத்தையும், இளைஞர்களையும் திருத்திக் கொள்ளவில்லை என்றால் வரும் தலைமுறைகளின் வாழ்க்கை ஐயப்பாட்டுக்குரியதாக ஆகிவிடும்.

இன்றைய ஆசிரியப் பெருமக்கள் நான் ஊதுகிற சங்கை ஊதுகிறேன்; கேட்டால் கேளுங்கள் இல்லையென்றால் எப்படியோ என்ற நிலையில்லாமல் மாணவர்களை நல்வழிப்படுத்த வேண்டும். மதிப்பெண் ஒன்றே குறிக்கோளாகக் கொள்வது பிள்ளைகளுடைய சுய சிந்தனைத் திறனை அழிக்க முயலும் செயலாகும். மாணவர்களுடைய நலனில் அக்கறை கொண்டு அவர்களுக்கு நன்னெறிகளையும், கற்கின்ற வழிமுறைகளையும் அதன் மூலம் சிந்தித்துத் தெளிகின்ற கல்வியை அளிக்க வேண்டும்.

இந்த முயற்சிக்குத் தேவை ஆர்வமும், அதிக சுயநலமல்லாத பண்பும் உழைக்கின்ற தெம்பும் நம் ஆசிரியப் பெருமக்களுக்கு இருந்தால் நம்முடைய சமுதாயத்தை மீட்டெடுத்து நல்வழிப் படுத்த முடியும் என்பது திண்ணம்.

*ஆசீர்வாதங்கள்!*
*ஸ்ரீ சற்குருநாதன் துணை.*



# பட்டினத்தார் பைந்தமிழ் - 11

தமிழாகரர் தெ. முருகசாமி
(மேனாள் முதல்வர் - இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி)

மணிவாசகர் ஆண்டவனைத் தீர்த்தன் நற்றில்லைச் சிற்றம்பலத் தாடும் கூத்தன் எனப் பாடிப்பரவினார். அவர், தீர்த்தன் என்ற தற்கேற்ப ஆன்மாக்கள் தங்களிடம் உள்ள ஆணவம் கன்மம் மாயை என்னும் மலங்களைக் கழுவிக்கொள்ளத் தீர்த்தமாடுவதாகவும் திருவெம் பாவையில் பாடினார்.

ஆக ஆன்மாவின் மலம் கழுவுதற்கேற்றவனாக ஆண்டவன் உள்ளது போல அவன் வீற்றிருக்கும் ஊரும் அவ்வாறே கழுவுதற்குரியது என்பதைத் தன் பெயரிலேயே கொண்டது சீர்காழியாம் கழுமலம் ஆகும். மலம் கழுவப்படும் இடம் கழுமலம் எனப்பட்டது.

அத்தகு பழம்பெருமை வாய்ந்த சீர்காழியைச் சார்ந்த ஊர்ச் சாயலைப் பற்றி நன்கறிந்த பட்டினத்தார் அவ்வூர்ப்பெருமானை வணங்குவது பற்றியும் வணங்கிப் பயன்பெறுவது பற்றியும் எளிமையாக வழிகாட்டுகிறார்.

தோணிபுரேசர் அடித்தாமரை சென்று சார்வதற்கே, போதும் பெறாவிடில் பச்சிலை உண்டு புனல் உண்டெங்கும் ஏதும் பெறாவிடின் நெஞ்சுண்டன்றே!

சீர்காழிக்குத் தோணிபுரம் என்றொரு பெயரும் உண்டு. பிரலய காலத்தில் ஒட்டு மொத்த ஆன்மாக்களும் தங்குதற்குத் தோணியாக இருந்த காரணத்தால் அப்பெயர் அமைந்தது. அவ்வூர்ப் பெருமானைத் தொழ, பூசை செய்வதற்கான சடங்கில் ஆரவாரம் காட்டாமல் கிடைத்த பச்சிலையையே பூவாகக் கொண்டும் கிடைத்த நீரையே அபிடேகித்தும் வழிபட்டால் போதும் என்கிறார் பட்டினத்தார். இவைகளும் கிட்டாதாயின் நினைக்க நெஞ்சுண்டு – என்கிறார். நெஞ்சம் உமக்கே இடமாக வைத்தேன் நினையா தொரு போதும் மறந்தறியேன் என்ற அப்பரடிகள் வாக்கிற்கேற்பப் பட்டினத்தார் நெஞ்சுண்டன்றே என்றார்.

பூசை செய்வதற்கான சரியை, கிரியைகளைக் காட்டிலும் அகப்பூசையான நினைப்பே போது மானது. பூசலார், வாயிலார் போன்ற பெரிய புராணத்துச் சிவ அடியார்கள் நெஞ்சால் வழிபட்டு முத்திப் பேறடைந்ததால் பட்டினத்தார் நெஞ்சுண்டன்றே என்றார்.

இத்தகு பூசையால் தெருள் ஞான வேந்தராய் வாழலாம் என நெஞ்சுக்கு நீதி கூறுகிறார். நன் நெஞ்சே! பூந்தராய் நாதரை நீ போற்று, தெருள்ஞான வேந்தராய் வாழலாம் எனப்பாடல் 14ல் கூறியுள்ளார்.

பூந்தராய் என்பது சீர்காழிக்கான ஒருபெயர் திருமால் - பன்றியாக உருக்கொண்டு (சுவேதவராக உருக்கொண்டு) பூமியைத்தன் கொம்பில் தாங்கி இரணியாக்கன் என்னும் அசுரனால் ஏற்பட்ட துன்பத்தினின்றும் உயிர்கனைக் காப்பாற்றினார். அந்த அசுரனைக் கொன்ற பழிபோகப் பூவும் தாரும் கொண்டு பூசித்ததால் சீர்காழிக்குப் பூந்தராய் என்ற பெயர் அமைந்தது.

மேலே கூறியவாறு ஞானம் அடையும் பயனேயன்றி ஆன்மாக்களுக்கு அழியாத இன்பமும் கிட்டும் என்கிறார் பட்டினத்தார். கும்பிட்டபத்தர்க்கு அழியாத இன்பம் கொடுக்கும் முத்தர் சண்பையர் - எண்பது 17ஆம் பாடலின் வரிகளாகும்.

சீர்காழிக்குச் சண்பைநகர் என்ற ஒருபெயர் உண்டு. சண்பு என்பது ஒருவகைக்கோரைப் புல். துருவாச முனிவர் தாம் தவம் செய்ய ஒரு சண்பைக் காடொன்றை உருவாக்கினார். அச்சண்டைப் புற்களைக் கொண்டே யாதவ குமரர்கள் தங்களுள் சண்டையிட்டு மடிந்தனர். சண்பைக் காட்டைத் தோற்றுவித்ததற்கு மாறான பாவம் சேர்ந்ததால் அப்பழி நீங்கத் துருவாசர் பூசித்துப் பேறு பெற்றதால் சண்பை நகராயிற்று.

அடுத்தும் நெஞ்சைப் பார்த்துக் கூறும் பட்டினத்தார் 27ஆம் பாடலில், நீ சைவச் செந்நெறியைக் கடைப்பிடித்தால் வேணுபுரேசனின் திருவருள்கிட்டும் என்கிறார். இப்பாடலில் மூன்று கட்டளையை நெஞ்சுக்குக் கூறுகிறார்.

1. விடையம் பொருள் என்று உணராத மார்க்கம் விரும்பு.
2. மழுப் படையம்புயக்கரத்து எந்தாதை ஞான பரமன் என்று எண்.

3. வேணுபுரேசன் அம்தாள் மலர் பொருள் என்றிரு.

பொறிபுலன்களால் நுகரும் இன்பமே இன்பம் என்று கருதாத சித்தாந்தச்சைவ நெறியே நெறி என்று உணர வேண்டும். இதனால் தோன்றி மறையும் சிற்றின்பத்தினும் பேரின்ப நுகர்வை உணர்தல் வேண்டும் என நெஞ்சுக்கு அறிவுறுத்தப் பட்டது.

அடுத்து உலகியல் நிலையில் மனத்தை அலைக் கழிக்கச் செய்யும் இவர் தேவர் அவர் தேவர் என் றெல்லாம் தடுமாறாமல் சிவனொருவனே என்ற உறுதிப் பாட்டுடன் ஒரு தெய்வ வழிபாட்டில் நெஞ்சை வழிப்படுத்த அறிவுறுத்தப்பட்டது.

எல்லாவற்றிற்கும் மேலாகத் திருவடியே சரணம் என அடைக்கலம் படும்படி நெஞ்சுக்கு அறிவுறுத்தப்பட்டது.

இவ்வாறெல்லாம் பட்டினத்தார் கூறக் காரணம் யாதெனில் அவர் காலத்தில் பல்வேறு சமய ஊடுருவலால் தாய்ச் சமயமான சைவசமயம் தாக்கப்படாமல் காக்கப்பட வேண்டியதன் இன்றியமையாமையை வற்புறுத்தவேயாம் என்று!

தெய்வம் உண்டென்றிரு. அதுவும் ஒன்றென்றிரு என்ற வழிவழியான கொள்கையைப் பேணிப் புரந்தருதற்கு வழிகோலிய பட்டினத்தாரின் அடிப்படை உணர்வை நன்கு புரிந்து கொண்டதால் தான் பின்னாளில் 19ஆம் நூற்றாண்டில் நகரத்தார் மரபில் தோன்றிய வரகவியாகிய பாடுவார் முத்தப்பர் எழுதி வைத்த குறிப்புகள் பலவற்றுள் நகரத்தார் சிவ மதம் தவிரப்பிற மதம் சாரார் என்பதாக் குறித்தருளியது சைவசமயக் காப்பு ஆவணமாக உள்ள தன்றோ! இக்கருத்தின் முகிழ்ப் பிற்குப் பட்டினத்தார் கருத்துக் கொடையே காரணமன்றோ!

ஈண்டுச் சீர்காழியை வேணுபுரம் என்ற பெயரால் பட்டினத்தார் சுட்டியுள்ளது சிந்திக்கத் தக்கது. வேணு - மூங்கில், சூரபது மனால் துன்புறுத்தப் பெற்ற இந்திரனது மனைவி இந்திராணி அடைக்கலமாக வந்து தங்கிப் பூசித்த தலம். பூசைக்குப் பாதுகாப்பாக மூங்கில் காடு இருந்தது.

திருக்கழுமலமும் மணிக்கோவை என்ற நூலைப் பொறுத்த மட்டில் பட்டினத்தார் சிவபூசை பற்றிய குறிப்பையே பெரும்பாலான

பாடல்களில் வற்புறுத்தினர், மேற்படியான சில பாடல்களில் நெஞ்சைக் கொண்டு நினைப்பால் பூசைசெய்யக் கூறியது போலவே புறப்பூசையாக ஆகம வழிபாட்டின் படியும் பூசைச் செய்ய சிலபாடல்களில் அறிவுறுத்தியுள்ளார்.

**சார்ந்தவர்ப் புரக்கும் ஈர்ஞ்சடைப் பெரும!**
**கைவல நெல்லியம் கனியது போலச்**
**சைவசித் தாந்தத்து தெய்வ ஆகமத்தை**
**வரன்முறை பகர்ந்த திருமலர் வாய!**

என 13ஆம் பாடலில் ஆகம விதிப்படி வணங்குதலைக் குறித்தார். ஈண்டு சைவ சித்தாந்தத்திற்குக் கொடுத்த அடைமொழி உவமை அற்புதமானது உள்ளங்கை நெல்லிக் கனி போன்றது சைவ சித்தாந்தம், அதன் வெளிப்படைத் தன்மையை வேறொரு கருத்தால் கூறாமல் மிக எளிமையாகக் கடைப்பிடிக்கக் கூடியதைப் பட்டினத்தார் உணர்த்தினார். மெய்கண்ட சாத்திரத் தோற்றங்கட்கு முன்னரே பட்டினத்தாரின் சமய உணர்வு போற்றுதற் குரியதாகும் எனத் தெரிகிறது. ஆக சைவமும் தமிழும் தழைத்தினிது ஓங்கச் செய்த தொண்டில் பட்டினத்தாரின் பங்களிப்பும் மகத்தானதாம் எனலாம். மேற்படியாகக் கூறிய சைவ சமயத்தை மொழிவழி நிலைநிறுத்தியதற்குரிய சான்றாக 17ஆம் பாடலில் பிறசமயத்தால் வரும் தாக்குதலுக்கு உள்ளாகாமல் சைவம் காக்கப் பட்டதன் பேருண்மையைப் பதிவு செய்கிறார்.

**இன்றென உளதென அன்றென ஆமென**
உரைதரு நூலையும் பொருளையும் தனித்தனி
பல்வித மாகச் சொல்வகைச் சமயம்

அளவிலை அதனால், இம்முறை இயங்குதல் செம்மையன்றென்று, யாவரும் நின் வயமே வரப்புரிவோய் எனக் கடற் பயணத்தில் தப்பித்துக் கரையேறுதல் போல் பிற சமய இடர்களினின்றும் சைவம் காக்கப் பட்டதன் உண்மை உவமைவகையால் உணர்த்தப்பட்டது.

மேலும் புறச் சமய உண்மைகளால் ஆன்மா தாக்குறுதலைச் சில உவமை வகையால் உணர்த்தி, ஆயிரம் கதிர்களால் சூரியன்

இருளைச் சீக்குதல் போல் புறச்சமய இருளைப் போக்கும் சைவச் சூரியனே என்கிறார் பட்டினத்தார்.

1. கல்லாலாகிய பசுவின் மடியை வருடும் பேதையர் போலவும் 2. எட்டிக் கனியை விரும்பும் அறிவிலி போலவும் 3. உமி குத்தி கை வருந்துவார் போலவும் 4. பாலை நிலத்தில் விதையிட்டு விளைச்சலைக்காண விரும்பும் பித்தரைப் போலவும் பாழாகக் காலத்தைக் கழிக்காமல் வெங்குருநாதா உன்திருவடி நினைப்பிலேயே மூழ்கியிருக்க அருள் செய்எனப் பட்டினத்தார் 22ஆம் பாடலில் வேண்டுகிறார்.

சீர்காழிக்கு வெங்குரு என்ற பெயரும் உண்டு. சுக்கிரன், தான் தேவகுருவுக்கு இணையாக ஆவதற்கு வரம் வேண்டிப் பூசித்து ஆனதால் வெங்குரு என்ற சிறப்புப் பெயர் அமைந்தது.

இங்ஙனம் பல்தரப்பட்ட பான்மையுடைய சிவன் உறையும் இடமான சீர்காழிக்குப் பன்னிரண்டு பெயருடைய சிறப்பைப் பட்டினத்தார் 10ஆம் பாடலில், பன்னீர் உகத்து வேறுவேறு பெயரின் ஊறின் றியன்ற புகலிநாயக எனக் குறித்துள்ளார். பல்வேறு காரணங்களால் அப்பன்னிரண்டு பெயர்களும் அமைந்தன ஆயினும் அவைகள் பன்னிரண்டு உகங்களின் பெற்ற வெவ்வேறு பெயர்களாம் எனப் பட்டினத்தார்கூறுவது புதுமையான குறிப்பாக உள்ளது. பன்னிரண்டு பெயர்களாவன ; 1. பிரமபுரம், 2. வேணுபுரம், 3. புகலி, 4. வெங்குரு, 5. தோணிபுரம், 6. பூந்தராய், 7. சிரபுரம், 8. புறவம், 9. சண்பை, 10. காழி, 11. கொச்சைவயம், 12. கழுமலம்

இப்பன்னிரண்டில் பட்டினத்தார் கழுமலநகரின் 30 பாடல்களின் பலவற்றில் எட்டுப்பெயர்களை மட்டும் (காழி, புகலி, பூந்தராய், சண்பை, வெங்குரு, வேணுபுரம், தோணிபுரம், கழுமலம்) மாறி மாறிக் கூறிச் சென்றுள்ளார்.

இதற்கு பன்னிரண்டு பெயருடைய ஒரே தலம் சீர்காழியைத் தவிர்த்து வேறில்லை என்பதால் இத்தலம் 12 அங்குலத்திற்கு மேலுள்ள துவாத சாந்தப் பெருவெளியை நினைப்பிக்கும் சிறப்புடையது எனலாம். அதனால்தான் இத்தலத்தில், சிவபெருமான் அங்கையற் கண்ணியுடன்

மதுரையில் திருமணக் கோலமுடன் காட்சி நல்குதல் போல் மானைக் கலந்த மணவாளனாக உள்ளான் என 30ஆம் பாடலில் பாடி மும்மணிக் கோவையை நிறைவு செய்கிறார். காழிப் பெருமானை வணங்குவோர்க்குத் திருமகள் மூலம் செல்வத்தையும் கலைமகள் மூலம் கல்விச் செல்வத்தையும் வாரி வழங்குவான் என்கிறார் பட்டினத்தார்.

இப்படியாகப் பட்டினத்தாரின் கழுமல நாதனைப் பைந்தமிழோடு போற்றும் நாம், அவர் பாடிப் பரவும் திருவிடைமருதூர் மும்மணிக்கோவையின் பைந்தமிழ்ச் சுவையையும் பருகுவோமாக!

*(தொடரும்...)*

## திருப்பாவை திருவெம்பாவை - ஒற்றுமை
## (முனைவர் அ.மீனாட்சி)

எல்லோரும் போந்தாரோ? போந்து
எண்ணிக்கொள் (15) (திருப்)
வண்ணக்கிளி மொழியார் எல்லோரும் வந்தாரோ?
எண்ணிக்கொள் உள்ளவா சொல்லுகோம் (4) (திருவெம்)

.............

எங்களை முன்னம் எழுப்புவான் வாய்பேசும்
நங்காய் எழுந்திராய் (14) (திருப்)
மானே நீ நென்னலே நாளை வந்து உங்களை
எழுப்புவான் என்றலும் (6) (திருவெம்)

.............

எற்றைக்கும் ஏழேழு பிறவிக்கும் உன்தன்னோடு
உற்றோமேயாவோம் உமக்கே ஆட்செய்வோம் (29) (திருப்)
உன்னைப் பிரானாகப் பெற்ற உன் சீரடியோம்
உன் அடியார்தாள் பணிவோம் ஆங்கவர்க்கே
பாங்காவோம் அன்னவரே எம் கணவராவார் (9) (திருவெம்)

.............

ஆழிமழைக்கண்ணா என்ற பாடலில் தாழாதே
சார்ங்கம் உதைத்த சரமழை போல் உலகினில்

பெய்திடாய் (4) (திருப்)
முன்னிக்கடலைச் சுருக்கி எழுந்து தமக்கு முன்
சுரக்கும் என்னருளே என்னப் பொழியாய்
மழையேரோல் எம்பாவாய் (திருவெம்)

### வேற்றுமை

1. திருப்பாவையில் இயற்கை அன்னை நடம்புரியக் கண்டு களிக்கலாம். திருவெம்பாவையில் பக்திச் சுவை, நனி சொட்டுவதைப் பார்க்கலாம்.

2. திருப்பாவையில் இளம் பெண்களின் உள்ளத் துடிப்பும் பாட்டுச் செம்மையையும் காணலாம். திருவெம்பாவையில் அன்பில் திளைத்த நடுவயதுள்ள அன்னையின் அன்புக் கடலில் மூழ்கி நிற்கும் ஆழ்ந்த உள்ளத்தை அறியலாம்.

3. சமய வெறி கடந்த இன்னாளில் எச்சமயத்தார்க்கும், எக்கொள்கையினர்க்கும் இலக்கியமாய் விளங்கும் இரு பாவைகளையும் படித்து இன்புறலாம். தனிமையில் இனிமை தருவது இலக்கியத்தினும் வேறுண்டோ.

### உவமை

ஆண்டாளுடைய ஒப்புயர்வற்ற நோக்கமும், இயற்கையை நுனித்தறிந்த சிறப்பும், ஆழ்ந்த பொருளை அமைத்து எளிதாகப் பாடிய திறமையும் திருப்பாவையில் நன்கு காணலாம். மேகம் கருநிறமுற்று மின்னி அதிர்ந்து, சீர்க்கால்கள் விட்டு மழை பெய்வதற்கு வேறு எங்கும் போகாமல் திருமாலிடத்திலிருந்து உவமை எடுத்துக் கூறுவது இன்பமளிப்பதாகும். மேகம் திருமால் உருவம் போலக் கருத்து சக்கராயுதம் போல மின்னி, சங்கு போல இடிஇடித்து, சார்ங்கம் எய்யும் அம்பு மழைபோல நீர்த்தாரைகளை விட்டுப் பொழிவதாகப் பாடியுள்ளார் ஆண்டாள். எருமைச் சிறுவீடு மெய்தல் வான்முகில் வழாது பெய்க என்ற சொற்றொடர் அமைத்து ஆகியவற்றை தழுவி திருவெம்பாவை அமைந்தது.

முடிவுரை

திருப்பாவைப் பாசுரங்கள் நாளுக்கு நாள் ஒன்றாகப் பாடஇயற்றப்பட்டன என்று கருதுவது தவறு. ஒவ்வொரு நாளும் முப்பது பாசுரங்களையும் படிக்கலாம். கடைசிப் பாட்டாகிய முப்பதாம் பாட்டில் ஆண்டாள் பட்டர்பிரான் பெரியாழ்வார் மகளாகிய கோதை சொன்ன இம்முப்பது பாட்டுக்களையும் படிப்போர் திருமாலால் எங்கும் திருவருள் பெற்று இன்புறுவர் என்று முடித்துள்ளார். திருப்பாவை திருவெம்பாவைப் பாடல்கள் மக்கள் இலக்கியமாய் உரையுடன் பலரால் வெளியிடப்பட்டுள்ளன. திருப்பாவையை நாள்தோறும் விடியற்காலை எழுந்து படித்தல் வேண்டும். இயவில்லை என்றால் சிற்றஞ்சிறுகாலை என்ற பாசுரத்தையேனும் நித்தம் படிக்க வேண்டும் என்பது வைணவர்கள் மரபு.

## மாணிக்கவாசகரின் ஆசை

(டி.ஆர்.குருமூர்த்தி, பேராசிரியர் & துறைத்தலைவர்
வணிகவியல் துறை, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி)

இறைவன் மீது நம்பிக்கை வைத்து வணங்குவதும், ஆலயங்களை அமைப்பதும், திருவிழாக்களை மிகச் சிறப்பாகக் கொண்டாடி மகிழ்வதும், இறைவனுக்கு அபிஷேக ஆராதனைகளைச் செய்வதும் நமது கலாச்சாரமாகவே இருந்து வருகின்றது. மனிதர்கள் மீதான பாசமும், இறைவன் மீதான பக்தியும் நமது கலாச்சாரத்தின் கூறுகளாகவே இருக்கின்றன. நமக்கு உரிய தேவைகளை, சுபகாரியங்களை இறைவனிடம் வேண்டுதலாக வைத்து வழிபடுகின்றோம். அனைவரும் சேர்ந்து யாகங்களைச் செய்து மழை வேண்டி வழிபடுகின்றோம். குழந்தைகளின் கல்வி மேம்பட வழிபாடு நடத்துகின்றோம். ஆனால் மாணிக்கவாசகரின் ஆசையும் வேண்டுதலும் முற்றிலும் மாறுபட்டு இருக்கிறது. எதற்கு ஆசைப்பட்டால் வேறு எதுவும் தேவையில்லையோ, எல்லாம் கிடைத்ததாக ஆகுமோ அதனை மாணிக்கவாசகர் ஆசைப்பட்டு விரும்புகிறார். இறைவனது அருளைப் பெற்றுவிட்டால், வாழ்வதற்குரிய அனைத்தும் பெற்றதாகிவிடும் என மாணிக்கவாசகர் தெரிவிக்கின்றார்.

இறையருளே மாணிக்கவாசகரது ஆசையாக இருக்கின்றது. இறையருள் பெற்றதன் விளைவாகத்தான் கீழ்க்கண்ட வரிகள் மாணிக்கவாசகரால் எழுதப் பெறுகின்றன.

வேண்டத்தக்கது அறிவோய் நீ
வேண்ட முழுதும் தருவோய் நீ
வேண்டும் அயன்மாற்கு அரியோய் நீ
வேண்டி என்னைப் பணிகொண்டாய்
வேண்டி நீயாது அருள் செய்தாய்
யானும் அதுவே வேண்டின் அல்லால்
வேண்டும் பரிசொன்று உண்டென்னில்
அதுவும் உந்தன் விருப்பன்றே.

அடியார்களின் ஆசை இறையருளாக அமைகின்ற போது அடியார்களின் தேவைகளை இறைவன் அறிந்து பூர்த்தி செய்வார். எனக்கு ஏதாவது தேவை என்றால் அதுவும் உன் விருப்பமே என மாணிக்கவாசகர் உருகி நிற்கின்றார். ஒவ்வொருவரின் தேவையினையும் ஆசைகளையும் இறைவன் அறிவார் என்கிறது திருவாசகம். இன்பமான வாழ்வும், நீடித்த இன்பமும் அனைவரின் ஆசையாகும். அன்பாய் இருந்து அடியார் இடர் நீக்கிடும் இறைவனைக் காணும் போது உய்யப்பெற்று இன்பமது ஆயிற்றே எனக் கீழ்க்காணும் பாடலில் அப்பர் தெளிவுபடுத்துகின்றார். இறையருளே இன்பம் எனப் புரிகின்றது.

உம்பரானை உருத்திரமூர்த்தியை
அம்பரானை அமலனை ஆதியைக்
கம்பு நீர்க்கடு வாய்க்கரைத் தென்புத்தூர்
எம்பிரானைக் கண்டு இன்பமது ஆயிற்றே.
அன்பனை அடியார் இடர் நீக்கியைச்
செம்பொனைத் திகழும் திருக்கச்சியே
கம்பனைக் கடுவாய்க்கரைத் தென்புத்தூர்
நம்பனைக் கண்டு நானுய்யப் பெற்றேனே.

ஆண்ட நீ அருளிலையானால் வார்கடல் உலகில் வாழ்கிலேன் கண்டாய் என மாணிக்கவாசகர் இறையருளின் சிறப்பினை

வலியுறுத்துகின்றார். எம்பிரானே என்னை ஆண்ட நீ, எனக்கு அருள் செய்யவில்லையெனில், கடல்சூழ்ந்த இவ்வுலகில் நான் வாழ்ந்திட இயலாது என மாணிக்கவாசகர் தெரிவிக்கின்றார். இறைவனது நாமங்கள் தொடர்ந்து மனம் உருகிச் சொல்லிக் கொண்டிருப்பவர்களுக்குத் துன்பம் ஏது இன்பமே வரும் எனப் பிணக்கு இலாத பெருந்துறைப் பெருமான் உன் நாமங்கள் பேசுவார்க்கு, இணக்கு இலாததோர் இன்பமே வரும், துன்பம் துடைத்த எம்பிரான் என்று மாணிக்கவாசகர் தெரிவிக்கின்றார். இறையருளே துன்பம் துடைத்து இன்பம் தரும் என்பதை உணர்ந்த மாணிக்கவாசகர் இறையருளை வேண்டி உருகி நின்று ஆசைப்பத்து எனும் பதிகம் இயற்றியுள்ளார்.

உலக வாழ்வில் மனிதர்களுக்குப் பல்வேறு இடர்கள் இருக்கின்றன. வாழ்வில் இருள்சூழ்கின்றது. அவ்விருளைப் போக்கவும் நல்வாழ்வு தேடவும் பல்வேறு வழிகளில் முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன. நினைப்பிற்கேற்ப நடப்புகள் அமைந்தால், இடர்கள் இல்லை. வாழ்வில் இருள் இல்லை. மாறாக இருப்பின் இடர் உண்டு. இருளைப் போக்கும் ஒளியாக இறையருள் உணரப்படுகின்றது. இதனை மாணிக்கவாசகர் ஆசைப்பட்டார்.

**இருளைத் துரந்திட்டு இங்கேவா என்று அங்கே கூவும்**
**அருளைப் பெறுவான் ஆசைப்பட்டேன் கண்டாய் அம்மானே**

இருளைத் துரந்துவிட்டுத் தன்னிடம் வா என இறைவன் கூவித் தன்னை அழைக்கும் அருளைப் பெற வேண்டும் என மாணிக்கவாசகர் ஆசைப்பட்டார். இறையருள் நல்வாழவு தரும்.

இறைவனைத் தொழுது திருவடிகளை மிக இறுக்கமாகப் பற்றிக் கொண்டு தலைமேல் வைத்து எம்பெருமான் எனக் கொண்டாடி வாயால் பாடி, அனல்சேர் மெழுகு போல உருகி நிற்க, மாணிக்கவாசகர் வேண்டும் பரிசு, இறைவன் திருவடியே என எடுத்துக் கொள்ளலாம்.

இறையருள் பெற்றவர் இறந்தும் வாழ்வார். உலகம் உள்ளவரை வாழ்வார். அனைவராலும் வணங்கப் படுவார், போற்றப்படுவார் என்பதைத் திருவாசகம் உணர்த்துகின்றது.

சிவபெருமானே என்னைக் கூவிக்கொள் உன்முகம் காண ஆசைப்பட்டேன் எனை நோக்கி நீ புன்முறுவல் செய்ய ஆசைப்பட்டேன். உன் திருமலர்ப்பாதம் அடைந்து நின்றிட ஆசைப்பட்டேன். உன் திருமலர்ப்பாதம் அடைந்து நின்றிட ஆசைப்பட்டேன். பேராயிரமும் பரவித் திரிந்து, எம்பெருமான் என உனது இறையருளைப் போற்றி உயர்த்த ஆசைப்பட்டேன். நான் இரங்கத் தக்கவன் என நீ எண்ணி என் மீது அருள்புரிய வேண்டும் என ஆசைப்பட்டேன். மையலார் வெகுளியிலே அகப்பட்டு நைந்து விடாமல், அஞ்சாதே உனை ஆட்கொள்கிறேன் என இறைவன் எனை நோக்கிச் சொல்ல ஆசைப்பட்டேன்.

அழுதால் உன்னைப் பெறலாமே என்கின்ற தெய்வீக வரிகளுக்கிணங்கத் தன்னை மறந்து, இறைவனை நினைத்து உருகிநிற்கும் போது, இறையருள் பெற வாய்ப்பு ஏற்படுகின்றது.

திருவாசகத்திற்கு இறைவனே உருகினார். மானுட வாழ்வைச் செதுக்கும் வாசகம் திருவாசகம். புளியம்பழம் ஒத்து இருந்தேன் அளியேன் என்ன ஆசைப்பட்டேன் என்கிறார் மாணிக்கவாசகர். புளியம்பழம் வாழ்வின் தத்துவத்தை விளக்குகின்றது. புளியங்காயில் ஓடு காயோடு ஒட்டியிருக்கும். அதுபோல மனிதர்கள் ஆரம்ப வாழ்க்கையில் பந்த பாசங்களோடு சொத்து சுகங்களோடு ஒட்டியே இருப்பர். புளியங்காய் பலமாதங்கள் கழித்துப் பக்குவப்பட்டுப் பழமாக மாறும்போது, புளியம்பழத்தை விட்டு ஓடு தனியாக இருக்கும். பக்குவப்படாத புளியங்காய் பழமாகாது. உணவிற்கு உதவாது. பக்குவப்படாத மனிதன் சமுதாயத்திற்கு உதவமாட்டான். மனிதனது வாழ்வு பக்குவப்படுகின்ற போது அனுபவங்கள் உயர்கின்ற போது, புளியம்பழத்து ஓடு பழத்தை விட்டு விலகி இருப்பது போல, வாழ்வில் தான் விலகி இருக்க வேண்டும். அந்தப் பக்குவம் மற்றவர்களை வழிகாட்டி வாழ்வில் தான் விலகி இருக்க வேண்டும். அந்தக் பக்குவம் மற்றவர்களை வழிகாட்டி வாழ்வில் உயர உதவிட வேண்டும். புளியம்பழம் ஒத்து இருந்தேன் என மாணிக்கவாசகர் சொல்வது போல நாமும் புளியம்பழம் ஒத்து இருந்தால் வாழ்வு வளம் பெறும். இன்பம் தழைக்கும்.

மாணிக்கவாசகர் உடலலை நேசிக்கவில்லை. ஊன்சுவர் பொய்க்கூரை அளிபுண் அகத்து புறத்தோல் மூடிய யாக்கை, சீவாந்து, ஈ மொய்த்து அழுக்கொடு திரியும் சிறுகுடில், மலம்சோர் ஒன்பது வாயிற்குடில் என உடலைக் குறை கூறினார். ஆனால் உன்னத வாழ்வைப் போற்றினார். ஆதரித்தார். வாழ்வு நெறிகளைத் தமது பாடலிலே வகுத்துத் தந்துள்ளார். நெறியல்லா நெறிதன்னை நெறியாக நினைக்கக் கூடாது. முத்திநெறி அறியாத மூடரொடு சேரக்கூடாது. அச்சோப் பதிகம், முழுவதும் வாழ்வு நெறியினைச் சுட்டிக் காட்டுகின்றது. இறையுணர்வும் இறையருளும் தன்நெஞ்சிலே என்றும் குடிகொண்டிருக்க வேண்டுமென மாணிக்கவாசகர் ஆசைப்பட்டார் இக்கருத்தினை இராமலிங்க அடிகளாரும் நமக்கு கீழ்க்காணும் பாடலில் உணர்த்துகின்றார். பெற்ற தாய்தனை மகமறந்தாலும், பிள்ளையைப் பெறும் தாய்மறந்தாலும், உற்ற தேகத்தை உயிர்மறந்தாலும், உயிரை மேவிய உடல்மறந்தாலும், கற்ற நெஞ்சகம் கலைமறந்தாலும் கண்கள் நின்று இமைப்பது மறந்தாலும், நற்றவத்தவர் உள்ளிருந்தோங்கும், நமச்சிவாயத்தை நான்மறவேனே.

பெற்ற தாய்தனை மகமறந் தாலும்
பிள்ளை யைப்பெறும் தாய்மறந் தாலும்
உற்ற தேகத்தை உயிர்மறந் தாலும்
உயிரை மேவிய உடல்மறந் தாலும்
கற்ற நெஞ்சகம் கலைமறந் தாலும்
கண்கள் நின்றிமைப் பதுமறந் தாலும்
நற்ற வத்தவர் உள்ளிருந் தோங்கும்
நமச்சி வாயத்தை நான்மற வேனே.

இறையுணர்வும் இறையருளும் வாழ்வின் நல்லஆசையாகும்.

*சிவாய நம*

*திருச்சிற்றம்பலம்*



## கைவல்ய நவநீதம் - தத்துவ விளக்கப் பாடல்

(கவி எண்.5 ல் பவமறு ஞானதீர்த்தத்திற்கு ஆராய்ச்சி உரை
பா. வெங்கடராமன்)

**இவன் அதிகாரி யானோன் இந்திரியங்களாலும்
புவன தெய்வங்களாலும் பூத பௌதிகங்களாலும்
தவனம் மூன்றடைந்து வெயில் சகித்திடாப் புழுப்போல் வெம்பிப்
பவமறு ஞானதீர்த்தம் படிந்திடப் பதறினானே.**

இப்பாடலின் கடைசி வாக்கியமான பவமறு ஞானதீர்த்தம் படிந்திடப் பதறினானே என்பதற்கான விளக்கம் பின்வருமாறு! பவமறு என்றால் (பவம் + அறு) பிறப்பு நீங்க என்றும் ஞானத்தில் படிந்திட என்றால் ஞான நீரில் மூழ்கிட என்றும் பொருளாகும். அதாவது தன்னுடைய பிறவி நீங்க ஞான நீரில் மூழ்கிட அதிகாரி யானவன் பதறினான் என்றாகிறது.

பிறப்பு என்பது ஒரு செயல், ஒரு நிகழ்வு ஆகும். ஞானம் என்பது ஒரு அறிவு சார்ந்த விஷயமாகும். அறிவு சார்ந்த விஷயம் ஒரு செயலை (அ) கருமத்தை நீக்குமா/ என்றால் நீக்காது. மேலும் ஞான தீர்த்தம் என்று ஏதாவது இருக்கிறதா என்றால், கோயில் குளங்களுக்கு அக்னி தீர்த்தம், பிரம்ம தீர்த்தம், ஞான தீர்த்தம் என்றெல்லாம் பெயர் வைக்கப்பட்டு இருக்கும். அவற்றில் மூழ்கி ஒருவருடைய பிறவிப்பிணி நீங்குமா? என்றால் தெரியாது. ஏனெனில் அதற்கு எந்த வொரு பிரமாணமும் சாட்சியும் இல்லை.சிலர், குருவின் பாத அபிஷேக நீர் ஞான தீர்த்தம் என்று சொல்வார்கள். ஆனால் நூலின் கடைசிப் பாடலில்

**குலவு சற்குரு பாதகுளிர் புனல் தலைமேற் கொண்டால்
உலகினில் தீர்த்த மெல்லாம் உற்ற பேறடைவார் போல**

என்று குறிப்பிடப்பட்டுள்ளது. அதாவது உலகில் உள்ள புனித நதிகளில் நீராடிய பலன் கிடைக்கும் என்று கூறப்பட்டுள்ளது. நம்முடைய பாரத தேசத்திலே கங்கை முதலாக ஏழு நதிகள் புண்ணிய நதிகள் என்று சொல்லப்படுகின்றன. அதில் கங்கை நதி முதன்மையாகச் சொல்லப்படுகிறது. அதில் நீராடுபவர்களுக்குப் பாவம் போகும்

புண்ணியம் சேரும் என்று சொல்வார்கள். உண்மையில் நீராடினால் பாவம் போகுமா? புண்ணியம் சேருமா? என்றால் அது கேள்விக் குறியாகத் தான் இருக்கும்.

இது தொடர்பாக ஒரு சிறு கதை சொல்லப்படுகிறது. கங்கையில் ஆயிரக்கணக்கானோர் குளித்துக் கொண்டிருக்கிறார்கள். கைலாயத்திலிருந்து பார்வதி தேவியும் பரமேஸ்வரனும் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். அப்போது பார்வதிதேவி, கங்கையில் ஆயிரக்கணக்கானோர் குளிக்கிறார்கள், ஆனால் சொர்க்கத்திற்கு செல்பவர்கள் எண்ணிக்கையோ, கைலாயத்திற்கு வருபவர்களின் எண்ணிக்கையோ மிகவும் சொற்பமாக உள்ளதே, ஏன் என்று கேட்பார்கள். அதற்குப் பரமேஸ்வரன், நாம் நேரில் சென்று விசாரித்து வருவோம் என்று கூறி இருவரும் பூலோகத்திற்கு வருகிறார்கள். பார்வதி ஒரு இளமங்கை வடிவம் எடுத்துக் கொள்வார். பரமேஸ்வரன் ஒரு குரூபியாக உருமாறி அந்த இளம்மங்கையின் மடியில் தலைவைத்துப் படுத்துக் கொள்வார். பிறகு, அந்த இளமங்கை, ஐயோ!, கணவரைக் காப்பாற்றுங்கள் என் கணவரைக் காப்பாற்றுங்கள் என்று ஓலமிட்டு வருவார் அப்போது கங்கையில் குளித்துவிட்டு வந்தவர்கள் எல்லோரும் என்னம்மா, என்ன விஷயம் என்ன செய்ய வேண்டும் என்று கேட்பார்கள். அதற்கு அந்த இளமங்கையானவர், என் கணவருக்கு உடல்நிலை சரியில்லை, கங்கையில் முழ்க வைத்துக் கொண்டு வந்தால் குணமடைவார் என்றுசொல்வார். உடனே எல்லோரும் நான் செய்கிறேன், நான் செய்கிறேன் என்று முன் வருவார்கள். அதற்கு அந்த இளமங்கையானவர், யாரிடத்தில் பாவம் இல்லையோ அவர்கள் தான் என் கணவரைத் தொட முடியும், மற்றவர்கள் தொட்டால், அவர்கள் தலை வெடித்துவிடும் என்று கூறுகிறார். அதைக் கேட்டதும், எல்லோரும் பின்வாங்கிச் சென்று விடுவார்கள். சிறிது நேரம் கழித்து அந்த அம்மையார் மீண்டும் ஓலமிட்டு அழுவார். அப்போது கங்கையில் குளித்து விட்டு வந்த ஒரு இளஞன், என்ன தாயே! ஏன் அழுகிறீர்கள், நான் என்ன செய்ய வேண்டும் என்று கேட்டான். அதற்கு அந்த இளமங்கை என் கணவர் உடல்நிலை சரியில்லை அவரைக்

கங்கையில் மூழ்க வைத்துக் கொண்டு வரவேண்டும் என்று கூறுவார். அந்த இளஞன் நான் செய்கிறேன் என்று கூறிமுன் வருவான் அப்போது அந்த இளமங்கை யானவர் யாரிடம் பாவமில்லையோ அவர்கள் தான் என் கணவரைத் தொட முடியும்; மற்றவர் தொட்டால் தலை வெடித்துவிடும் என்று கூறுவார். அதற்கு அந்த இளஞன், என்ன தாயே! நான் இப்போது தான் கங்கையில் நீராடிவிட்டு வருகிறேன், என்பாவம் எல்லாம் போய்விட்டது, நான் தொட்டுத் தூக்கலாம் என்று சொன்னதும் அந்த இருவரும் இறைவன், இறைவியாகக் காட்சி கொடுத்து அருள் புரிந்துவிட்டு மறைந்து விடுவார்கள்.

இந்தக் கதையின் வாயிலாக என்ன தெரிகிறது என்றால் கங்கைநதி புண்ணிய நதி என்ற நம்பிக்கை வெகுவாகக் குறைந்து விட்டது. யாரோ சிலர்தான் நம்பிக்கை வைத்துள்ளனர். அதுமட்டுமல்லாது, இந்தக் கலியுகத்தில் கங்கையின் புனிதம் குறைந்து வருவதாகவும், மாசு அடைந்துள்ளதாகவும் சொல்லப்படுகிறது.

ஆகவே, ஞானதீர்த்தம் என்றோ புண்ணிய தீர்த்தம் என்றோ எதுவும் இல்லை; இருந்தால் அதில் மூழ்கி நம்பிக்கையை மாற்றிக் கொள்ளலாம். அவ்வாறு நதிகள் குளங்கள் ஏதும் இல்லை. சிலர், குருவின் உபதேசம் ஞான தீர்த்தம் என்றும் சொல்வார்கள்; கைவல்ய நவநீதத்தில், உள்ளது பிறவிமாற்றும் உபாயம் ஒன்று உண்டு; சொன்னது கேட்பாயாகில் தொடர்பவம் தொலையும் என்றார் என்றதும்.

தொடர்பாவம் தொலையும் என்று சொன்னதைக் கேட்ட போது தடமது முழ்கினான் போலச் சரீரமும் குளிர்ந்து உள்ளாறி என்று சொல்லும் போது, குருவின் உபதேசம் ஞான தீர்த்தமாக ஏற்றுக் கொள்ளலாம். ஆனாலும் இங்கேயும் சில சந்தேகங்கள் உண்டாகின்றன. அதாவது குரு என்ற சற்குரு; சற்குரு என்றால் சத்தை அறிந்தவர். தன்னை ஆன்மாவாக, சத்தியஞான அனந்த ஆனந்தபிரம்பம் அறிந்தவர். அவரால் தான் பிறவி மாற்றுவதற்கான உபதேசம் சொல்ல முடியும் உதாரணமாக, ஒரு குறிப்பிட்ட அந்த ஊருக்குச் செல்ல வேண்டுமானால் அந்த ஊருக்குப் போய் வந்த

ஒருவரால் தான் அந்த ஊருக்குப் போவதற்கான சரியான வழியை, பாதையைக் காட்ட முடியும் மற்றவர்கள் சொல்லும் வழியில் செல்லுதல் குழப்பத்தையும் சந்தேகத்தையும் தான் கொடுக்கும். அதோடு அந்த ஊருக்குப் போய்ச் சேரவும் முடியாது. ஆகவே சற்குருவின் உபதேசம் ஞான தீர்த்தம் என்று பொருள் கொள்ளலாம்; ஆனால் சற்குரு வாய்ப்பது இக்கால கட்டத்தில் துர்லபமாக உள்ளது. தாயுமானவர் சுவாமிகள் தலம், தீர்த்தம், மூர்த்தம் முறையாய் தொடங்கினவர்க்கு ஒரு சற்குருவும் வாய்க்கும் பராபரமே என்று குறிப்பிடுகிறார். இருந்தாலும் முன் சொன்னது போல சற்குரு வாய்ப்பது அரிதாக உள்ளது.

அடுத்ததாக ஞான தீர்த்தம் என்ற சொல்லுக்கு நேர் பொருள் குருஉபதேசம் என்று சாஸ்த்ர அர்த்தம் இருப்பதாகத் தெரியவில்லை. அடுத்து, குரு உபதேசமும், ஒரு அறிவு சார்ந்த விஷய மாவதால் அதுவும் ஒரு செயலை அல்லது கர்மத்தை நீக்காது.

ஆகவே மேற் சொன்ன காரணங்களால், ஞான தீர்த்தம் என்று ஒன்றின்மையானும், ஞானமானது அறிவு சார்ந்த விஷயமாய் இருப்பதாலும் ஞானதீர்த்தத்தில் மூழ்கித் தனது பிறவியை மாற்றிக் கொள்ளப் பதறினானே என்று சொல்லும் போது வாக்கியப் பொருள் பேதம் அல்லது முரண்பாடு காணப்படுகிறது.

ஆனாலும், தாண்டவராய சுவாமிகள், மேலே சொன்ன பாடல்களில் பிறவி நீங்க உபாயம் ஒன்று உண்டு என்று உறுதியாகச் சொல்லும் போது, இந்தப் பாடல் வாக்யத்தின் உள்பொருள், உண்மைப் பொருள் என்னவகை இருக்கும் என்று விசாரணை வாயிலாக அறியலாம். அதற்கும் தாண்டவராய சுவாமிகள் பின் வரும் பாடல் வாயிலாக உபாயம் கூறுகிறார்.

வடநூல் வல்லவர்கள் சொல்லும் வாசகப் பொருள் சேராமல்
இடராகில் பொருளாம் வண்ணம் இலக்கணை உரையால் கொள்வார்
திடமான அதுவும் மூன்றாச் செப்புவார் விட்ட தென்றும்
விடலிலாது என்றும் விட்டு விடாததென்றும் பேராமே

அதாவது எங்கெல்லாம் வாக்ய பொருள்பேதம் காணப் படுகிறதோ, அங்கெல்லாம் தர்ம சாஸ்த்ரம், நியாய சாஸ்த்ரம் இவைகளால் கூறப்பட்டுள்ள விட்டலட்சணை, விடாதலட்சணை விட்டுவிடாத லெட்சணை ஆகிய மூன்று உதாரணங்களின் அடிப்படையில் பொருள் கொண்டு பேதம் நோக்கிக் கொள்வார்கள் என்று குறிப்பிடுகிறார்.

பவம் என்ற வாக்யத்திற்குப் பிறப்பு என்று பொருள் வாக்யத்தின் அர்த்தம் வாக்யார்த்தம் (அ) வாச்சியார்த்தம் அந்தந்தச் சொல்லின் சக்தி அர்த்தம் - சக்தியார்த்தம் என்று சொல்லப்படுகிறது. இந்தச் சக்தியார்த்ததின் சம்பந்தமான நம் இலட்சியத்திற்கு ஹேதுவான பொருள் யாதோ அது இலட்சியார்த்தம் என்ப்படும். அதன்படி, பிறப்பு என்ற வாக்யார்த்தத்திற்கு இலட்சியார்த்தம் என்னவென்றால் பிறப்பு உண்டாவதற்குக் காரணமான காமம், கருமம், அஞ்ஞானம் ஆகிய மூன்றும் காரணமாகும். காமம் என்றால் ஆசை, ஆசையின் அடிப்படையில் பிறவி உண்டாகிறது. அதாவது பார்க்கின்ற, எதிரிட்டு அறிகின்ற பொருள்களனைத்தையும் அடைய வேண்டும் அனுபவிக்க வேண்டும் என்று ஆசைப்படுவது சீவர்களின் இயல்பு எல்லா ஆசைகளும் மூவகை ஆசைக்குள் அதாவது ஏடணை மூன்று சொல்லப்படும் மண், பெண், பொன் இவற்றில் இந்த மூவகை ஆசையால் எந்தெந்த ஆசை நிறைவேற வில்லையோ அந்த ஆசைகள் எல்லாம் ஏக்கப் பெருமூச்சாக சித்தத்தில் பதிவாகி அடுத்த பிறவிக்கு கருமத்தின் ஹேதுவாகிறது.

*(தொடரும்...)*

## திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

### ஈகை

### (வறுமையினால் வேண்டுவோர்க்கு மறுக்காமல் கொடுத்தல்)

1. வறியார்க்கு ஒன்று ஈவதே ஈகைமற்று எல்லாம்
   குறிஎதிர்ப்பை நீரது உடைத்து.

வறியார்க்கு - பொருளில்லார்க்கும், அதனைத் தேட வழியில்லார்க்கும்; ஒன்று - அவர்களுக்கு வேண்டிய ஒன்றை; ஈவதே -

கொடுப்பதே; ஈகை - கொடை எனப்படும்; மற்று எல்லாம் - பிறகொடைகள் எல்லாமும் ; குறிஎதிர்ப்பை நீரது - குறிக்கோளுடன் பெற்றதற்குத் திருப்பிக் கொடுக்கும் தன்மையை ; உடைத்து - உடையதாகும்.

பொருளில்லார்க்கும் அதனைத்தேட வழி இல்லாதார்க்கும் அவர்களுக்கு வேண்டிய ஒன்றைக் கொடுப்பதே கொடை எனப்படும். பிறகொடைகள் எல்லாமும் குறிக்கோளுடன் பெற்றதற்குத் திருப்பிக் கொடுக்கும் தன்மையை உடையதாகும்.

**2. நல்ஆறு எனினும் கொளல்தீது மேல்உலகம்**
**இல்எனினும் ஈதலே நன்று.**

நல்ஆறு எனினும் - நல்லவழியில் வரும் பொருள் என்றாலும் ; கொளல்தீது - கேட்டுப் பெறுதல் தீயதாம் ; மேல் உலகம் இல்எனினும் - வீடுபேறு என்னும் உலகம் கிடைக்காது என்றாலும் ; ஈதலே நன்று - வறியார்க்குக் கொடுப்பதே நன்மையாகும்.

நல்லவழியில் வரும் பொருள் என்றாலும் கேட்டுப் பெறுதல் தீயதாகும். வீடுபேறு என்னும் உலகம் கிடைக்காது என்றாலும் வறியார்க்குக் கொடுப்பதே நன்மையாகும்.

**3. இலன்என்னும் எவ்வம் உரையாமை ஈதல்**
**குலன் உடையான் கண்ணே உள.**

இலன் என்னும் எவ்வம் - தான் பொருளில்லாதவன் என்னும் நிலையினை (துன்பத்தை) உரையாமை சொல்லாமையும் ; ஈதல் - கேட்போர்க்குக் கொடுப்பதும்; குலன் உடையான் கண்ணே உள - நல்லகுடிப் பிறந்தவனிடத்தில் உள்ள பண்புகளாகும்.

கேட்போனிடத்தில் தான் பொருளில்லாதவன் என்று சொல்லாமையும் அவனுக்கு வேண்டியதைக் கொடுப்பதும் நல்லகுடிப் பிறந்தவனிடத்தில் உள்ள பண்புகளாகும்.

**4. இன்னாது இரக்கப் படுதல் இரந்தவர்**
**இன்முகம் காணும் அளவு.**

இன்னாது இரக்கப்படுதல் - இரக்கப்படுதலும் இன்னாதது ஆகும் ; இரந்தவர் - கேட்டுநிற்பவர் ; இன்முகம் காணும் அளவு - பொருள் பெற்றதனால் மகிழும் முகத்தைக் கண்ட அளவில்.

கேட்டு நிற்பவர் பொருளைப் பெற்றதனால் மகிழும் முகத்தைக் கண்ட அளவில் அவர்மீது இரக்கப்படுதலும் இன்னாதது ஆகும். எனவே வறியாரைக் கண்ட அளவிலேயே அவருக்குக் கொடுப்பதே சிறந்ததாகும்.

5. **ஆற்றுவார் ஆற்றல் பசியாற்றல் அப்பசியை**
**மாற்றுவார் ஆற்றலின் பின்.**

ஆற்றுவார் ஆற்றல் - வலிமையுள்ளவர்களின் வலிமை என்பது ; பசியாற்றல் - தம்பசியைப் பொறுத்துக் கொள்ளும் வலிமை ; அப்பசியை மாற்றுவார் - அந்தப்பசியைக் கொடையால் மாற்றுபவரின் ; ஆற்றலின்பின் - வலிமைக்குப் பின் ;

வலிமையுள்ளவர்களின் வலிமை என்பது தம்பசியைப் பொறுத்துக் கொள்வதுதான் ; அதுவும் அந்தப் பசியைக் கொடையினால் மாற்றுபவரின் வலிமைக் குப்பின்தான். பசிதீர்த்தலே சிறந்ததாகும்.

6. **அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்**
**பெற்றான் பொருள்வைப் புழி.**

அற்றார் - பொருளில்லாதார் ; அழிபசி தீர்த்தல் - வருத்துகின்ற பசியினைத் தீர்த்தல் ; அஃதொருவன் - அஃது ஒருவனுடைய ; பெற்றான் பொருள் வைப்பு - பொருளைப் பெற்றவன் அந்தப் பொருளைக் காத்து வைக்கும் இடம் ஆகும்.

பொருள் இல்லாதவரின் வருத்துகின்ற பசியினைத் தீர்த்தல் என்பதுதான் பொருளைப் பெற்றவன் அந்தப் பொருளைக் காத்து வைக்கும் இடம் ஆகும்.

7. **பாத்தூண் மரீஇ யவனைப் பசிஎன்னும்**
**தீப்பிணி தீண்டல் அரிது.**

பாத்தூண் - பகுத்துண்ணும் பண்பு ; மரீஇயவனை - பொருந்தியவனை ; பசி என்னும் தீப்பிணி - பசி எனப்படும் சுடும் நோய் ; தீண்டல் அரிது - தீண்டுவது அரிதாகும்.

பகுத்து உண்ணும் பண்பு பொருந்தியவனைப் பசி என்னும் சுடுநோய் தீண்டாது.

8. ஈத்து உவக்கும் இன்பம் அறியார்கொல் தாம்உடைமை
வைத்து இழக்கும் வன்க ணவர்.

ஈத்து உவக்கும் இன்பம் – பிறருக்குக் கொடுத்து அதனால் மகிழும் இன்பம் ; அறியார்கொல் – அறிய மாட்டார்களோ? ; தாம் உடைமை – தாம் சேர்த்து வைத்துள்ள பொருள்களை ; வைத்து இழக்கும் – கொடுக்காமல் பாதுகாத்து வைத்து இழக்கின்ற ; வன்கணவர் – வன்மைக் குணம் கொண்டவர்.

தாம் சேர்த்து வைத்துள்ள பொருள்களைப் பிறர்க்குக் கொடுக்காமல் பாதுகாத்து வைத்து இழப்பவர்கள், கொடுத்து அதனால் மகிழும் இன்பத்தை அறியமாட்டார்களோ?

9. இரத்தலின் இன்னாது மன்ற நிரப்பிய
தாமே தமியர் உணல்.

இரத்தலின் – பிறரிடம் பொருள் வேண்டி இரத்தலை விட ; இன்னாது மன்ற – மிகவும் கொடுமையானது ஆகும் ; நிரப்பிய – தாம் தேடிச் சேர்த்து நிரப்பி வைத்துள்ள செல்வத்தை ; தாமே தமியர் உணல் – தாம் மட்டுமே அமர்ந்து தனித்து உண்ணல்.

தாம் தேடிச் சேர்த்து நிரப்பி வைத்துள்ள செல்வத்தினைத் தாம் மட்டும் அமர்ந்து தனித்து உண்ணுதல், பிறரிடம் பொருள் வேண்டி இரத்தலைவிடக் கொடுமையானதாகும்.

10. சாதலின் இன்னாதது இல்லை இனிது அதூஉம்
ஈதல் இயையாக் கடை.

சாதலின் – ஒருவர்க்குச் சாதலை விட ; இன்னாதது இல்லை – கொடுமையானது இல்லை ; இனிது அதூஉம் – அதுவும் கூட இனியதாகும் ; ஈதல் இயையாக் கடை – வறியவர்க்கு ஒன்று கொடுக்க முடியாத பொழுது.

சாதலைவிட ஒருவர்க்குக் கொடுமையானது இல்லை ; ஆயினும் வறியவர்க்கு ஒன்று கொடுக்க முடியாத பொழுது அச்சாவும் இனியதாகும்.

*(தொடரும்...)*

## மடாலய நிகழ்வுகள்

### நாச்சியப்ப சுவாமிகள் குருபூஜை விழாவை முன்னிட்டு மாற்றுத் திறனாளிகளுக்கான போட்டிகள்

பார்வை குறைபாடு, செவித்திறன் குறைபாடு, உடல்குறைபாடு போன்ற மாற்றுத் திறனாளிகள் மற்றும் சிறப்புக்குழந்தைகளுக்காக ஒப்புவித்தல் போட்டி, பாவனை செய்தல், பேச்சுப்போட்டி, பாட்டுப்போட்டி, ஓவியம் வரைதல், வண்ணம்தீட்டுதல், காய்கறிகள் அச்சு ஓவியம் தீட்டுதல் ஆகிய போட்டிகள் நடத்தப்பெற்றன. இப்போட்டிகளில் சங்கரப்பதிக்கோட்டை நிர்மில் சிறப்புப் பள்ளி காரைக்குடி ரேணுகா ஊனமுற்றோர் பள்ளி, திருப்பத்தூர் டி.இ.எல்.சி பார்வைக்குறைபாடு உள்ளோருக்கான பள்ளி, காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழக ரிசோர்ஸ் பள்ளி மாணவ மாணவியரும், அழகப்பா மெட்ரிக் மேல்நிலைப் பள்ளி, கார்த்திகேயன் பள்ளி, ராமநாதன் செட்டியார் உயர்நிலைப்பள்ளி, பாரத் வித்யாலயம் பள்ளிகளில் பயிலும் மாற்றுத்திறனாளி மாணவ மாணவியரும் என மொத்தம் 178 பேர் பங்கு பெற்றனர். போட்டியில் பங்கு பெற்ற குழந்தைகள் அனைவருக்கும் கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் நினைவுப் பரிசு வழங்கி ஆசி கூறினார்கள்.

பங்கு பெற்ற குழந்தைகள் பேருந்துகள் மூலம் அழைத்து வந்து பங்கு பெறச்செய்து உணவு நினைவுப்பரிவு வழங்கிப் போட்டிகள் முடிந்தவுடன் பேருந்தில் அழைத்துச் சென்று விடப்பெற்றனர்.

### மாணவர்களுக்கான மராத்தான் ஓட்டப் போட்டி

கோவிலூர் மடாலயத்தின் 12வது மடாதிபதி நாச்சியப்ப சுவாமிகளின் 6வது குருபூஜையை முன்னிட்டு 6ம் வகுப்பு முதல் 12ம் வகுப்பு வரை உள்ள பள்ளி மாணவர்கள் கலந்து கொண்ட மினி மராத்தான் ஓட்டப்போட்டி கோவிலூர் ஆண்டவர் உடற்பயிற்சிக் கல்லூரியில் நடத்தப்பெற்றது. 6ம் வகுப்பு முதல் 8ம் வகுப்பு வரை உள்ள மாணவ மாணவியர்களுக்கு 9ம் வகுப்பு முதல் 12ம் வகுப்பு முடிய உள்ள மாணவ மாணவியர்களுக்கு என நான்கு பிரிவாக மினிமராத்தான் ஓட்டப்போட்டி நடைபெற்றது. தளக்காவூர் கருப்பர்

கோவிலில் தொடங்கிய மினிமாராத்தான் ஓட்டப் போட்டியைக் கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் கொடி அசைத்துத் தொடங்கி வைத்தார். இறுதியாகக் கோவிலூர் மடாலயத்தை வந்தடைந்த மாணவர்களுக்கு டீ, பிஸ்கட் வழங்கி நிறைவு செய்யப்பெற்றது. இப்போட்டியில் 35 பள்ளிகளைச் சார்ந்த 564 பேர் பங்கு பெற்றனர். பங்குப்பெற்ற அனைவருக்கும் பனியன் வழங்கப்பெற்றது. மருத்துவர், ஆம்புலன்ஸ் வாகனம், முதலுதவிப்பெட்டி, வழிநெடுகிலும் நின்று மாணவர்களுக்குப் பாதுகாப்பு அளித்தனர். இப்போட்டிக்கான ஏற்பாடுகளைக் கோவிலூர் ஆண்டவர் உடற்பயிற்சிக் கல்லூரி முதல்வர் டாக்டர் ரவீந்திரன் கலைக்கல்லூரி முதல்வர் டாக்டர் செல்லப்பா பாலிடெக்னிக் கல்லூரி முதல்வர் மாயாண்டி ஆகியோர் செய்திருந்தனர். கோவிலூர் மடாலயக் கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர் குமரப்பன் பள்ளி முதல்வர்கள் திருமதி மணிமொழிமோகன், திருமதி மணிமொழிமுருகன் மற்றும் பெற்றோர்கள், ஆசிரியர்கள், பொது மக்கள் பெருமளவில் பங்கு பெற்றனர். வெற்றி பெற்றவர்களுக்கான பரிசுகள் நிறுவனர் நாள் விழாவின் போது வழங்கப்படும் எனத் தெரிவிக்கப்பெற்றது.

**கோவிலூர் கண் மருத்துவமனை திறப்பு விழா**

காணல் அறக்கட்டளையால் கட்டப்பெற்ற கோவிலூர் கண் மருத்துவமனை திறப்பு விழா கோவிலூர் ஆதீனம் சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் முன்னிலையில் நடைபெற்றது. தமிழக அரசின் சுகாதாரத்துறைச் செயலர் ஜே. ராதாகிருஷ்ணன் ஐ.ஏ.எஸ். தலைமையில் அரவிந் கண்மருத்துவமனைத் துணைத்தலைவர் டாக்டர். நாச்சியார் மருத்துவமனையைத் திறந்து வைத்தார். மருத்துவமனைக் கல்வெட்டையும் அறுவைச் சிகிச்சை அரங்கையும் கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகளும், கண் மருத்துவக் கருவிகளைத் தமிழக அரசின் முதன்மைச் செயலர் மற்றும் கருவூலங்களின் ஆணையாளர் தென்காசி ஜவகர் ஐ.ஏ.எஸ். அவர்களும், நோயாளிக்கான படுக்கைப் பிரிவினை மதுரை காவல்துறை துணை ஆணையர் பிரதீப்குமார் ஐ.பி.எஸ் அவர்களும், வெளிநோயாளிகள் பிரிவினை மத்திய காவல் துறைக் கூடுதல்

முதன்மைச் செயலர் வாசசேஷகிரிராவ் ஐ.ஆர்.எஸ் அவர்களும் திறந்து வைத்தனர்.

விழாவிற்கு வந்திருந்தவர்களைக் காணல் அறக்கட்டளை இணை நிர்வாக இயக்குநர் ரத்னா பழனியப்பன் வரவேற்றார். மருத்துவமனையின் நோக்கங்கள் குறித்து அறக்கட்டளை நிர்வாக இயக்குநர் டாக்டர் கிருஷ்ணன் கூறினார். அவர் கூறுகையில் இந்த மருத்துவமனை கட்டிடம் கட்ட இடம் வழங்கிய கோவிலூர் மடாலயத்திற்கும் கோவிலூர் மடாதிபதி மெய்யப்ப சுவாமிகளுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்வதாகக் கூறினார். மேலும் இம்மருத்துவமனை விரிவுபடுத்தப்பட உள்ளதாகவும் கோடிக்கணக்கான ரூபாய் செலவில் உலகத்தரம் வாய்ந்த கருவிகள் மருத்துவமனையில் பொருத்தப்பட்டுள்ளன என்றும் வறுமைக் கோட்டுக்குக் கீழ் உள்ள மக்களுக்கு இலவசமாகவும், வசதிபடைத்தவர்களுக்குக் குறைந்த கட்டணத்திலும் அறுவைச் சிகிச்சை மற்றும் சிகிச்சை வழங்கப்படும் எனவும் கண்நோய் வராமல் தடுக்க விழிப்புணர்வு ஏற்படுத்தப்படும் எனவும் கூறினார். கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் பேசுகையில் இப்பகுதி மக்களுக்குப் பயனளிக்கும் வகையில் லாபநோக்கு இல்லாமல் சேவை மனப்பான்மையுடன் செயல்பட இருப்பதாகக் கூறியதால் மருத்துவமனை கட்ட இடம் வழங்கி உள்ளோம். மேலும் காரைக்குடிப் பகுதியில் இதயநோய், எலும்பு மருத்துவம், சிறுநீரக மருத்துவம் போன்றவற்றிற்குச் சிறந்த மருத்துவர்களும், மருத்துவமனைகளும் இல்லை. எனவே கண்மருத்துவமனையோடு பிறபிரிவுகள் கொண்ட மருத்துவமனையை உருவாக்க வேண்டும் எனவும் அதற்காகக் கோவிலூர் மடாலயம் 2 1/2 ஏக்கர் நிலம் அளிப்பதாகவும் கூறி நிலத்திற்கான ஆவணங்களை வழங்கினார். ரத்னா பழனியப்பன் பேசுகையில் நன்கொடையாளர் பலர் தாமாக முன்வந்து பெருமளவில் நிதி அளித்து வருவதாகவும் எனவே இம்மருத்துவமனை துணைத்தலைவர் டாக்டர். நாச்சியார் பேசுகையில், அறக்கட்டளை நோக்கங்களை நிறைவேற்றும் வகையில் மருத்துவர்களும், மருத்துவமனை ஊழியர்களும் சேவை மனப்பான்மையுடன்

செயல்படுவது அவசியம் என்றும் இதன் மூலம் தான் அறக்கட்டளை நோக்கங்களை நிறைவேற்ற முடியும் என்றும் கூறினார். அரவிந் கண்மருத்துவமனை இயக்குநர் டாக்டர். ரவீந்திரன் பேசுகையில் 50 வயதுக்கு மேற்பட்டவர்களில் 10 சதவீதம் பேர் தமிழ்நாட்டில் கண் நோயால் பாதிக்கப்பட்டுள்ளனர். வளர்ந்த மாநிலமான தமிழ்நாட்டில் அதிக எண்ணிக்கையில் இருப்பது குறிப்பிடத்தக்கது. இம்மருத்துவமனை கிராமப்புறப்பகுதியில் இருப்பதால் மக்கள் அதிக எண்ணிக்கையில் பயன்பெறுவர் என்றார். தமிழக அரசின் முதன்மைச் செயலர் ஜவகர் ஐ.ஏ.எஸ் தமிழக அரசின் மருத்துவக்காப்பீட்டுத்திட்டம், அதற்கு அரசு செலவு செய்த தொகை பயனாளிகளின் எண்ணிக்கை பற்றிக் குறிப்பிட்டார் மேலும் செலவு செய்த தொகை பயனாளிகளின் எண்ணிக்கை பற்றிக் குறிப்பிட்டார் மேலும் அரசுடன் இதுபோன்ற தனியார் அமைப்புகளும் செயல்பட்டால் ஏழை எளிய மக்களுக்கு மருத்துவபயன் அதிகம் கிடைக்கும் என்றார். மத்திய கலால் துறையின் முதன்மைக் கூடுதல் செயலர் சேஷகிரிராவ் ஐ.ஆர்.எஸ். பேசுகையில் எனது தாய் மருத்துவர், இங்கு மருத்துவர்கள் அதிகம் இருப்பதால் நான் வீட்டில் இருப்பது போல் உணர்கிறேன். மேலும் எனது தாய் நகர்ப்புறத்துக்கு நான் வீட்டில் இருப்பது போல் உணர்கிறேன். மேலும் எனது தாய் நகர்ப்புறத்துக்குச் செல்லாமல் கிராமபுற மக்கள் பயன்பெற கிராமத்திலேயே மருத்துவத் தொழில் செய்தார் என்றார். எனவே சேவை மனப்பான்மையுடன் செயல்பட உள்ள மருத்துவமனையில் கிராமப்புற மக்கள் நன்கு பயனடைய வாழத்துவதாகக் கூறினார்.

மதுரைச் சரகக் கூடுதல் காவல்துறை துணை இயக்குநர் பிரதீப்குமார் ஐ.பி.எஸ் பேசுகையில் கிராமப்புற மக்கள் பயன்பெறும் வகையில் செயல்பட உள்ள இம்மருத்துவமனைத் திறப்புவிழாவில் மழை பொழிந்து இயற்கையும் வாழ்த்துகிறது. எனவே இம்மருத்துவமனை சிறப்பாகச் செயல்படும் என்றார். பின்னர் காணல் அறக்கட்டளை உறுப்பினர்கள் அறிமுகப்படுத்தப்பட்டு கௌரவிக்கப்பட்டனர். அறக்கட்டளை உறுப்பினர் ரங்கனாதன் நன்றி கூறினார்.

முன்னாள் சட்டமன்ற உறுப்பினர்கள் துரைராசு, சுந்தரம்,

தொழிலதிபர் படிக்காசு, தொழில் வணிகக்கழகக் செயலர் திராவிடமணி, அழகப்பா பல்கலைக்கழகப் பதிவாளர் பாலச்சந்திரன், மாவட்ட வருவாய் அலுவலர் இளங்கோ, தேவகோட்டை ஜமீன்தார் காளைராஜா, ராமகிருஷ்ணன் நகரத்தார் பள்ளிகளின் செயலர் ராமனாதன், காசி நகரச்சத்திர மேலாண்மைக் கழகத் தலைவர் லேனா காசிநாதன், பிள்ளையார்பட்டி டிரஸ்டிகள் பெரியகருப்பன், நாராயணன், கோவிலூர் ஊராட்சிமன்ற முன்னாள் தலைவர் அழகப்பன், மடாலய கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர் சே.குமரப்பன், டாக்டர். அய்க்கண், தலைமையாசிரியர் வள்ளியப்பன், சாகித்ய அகாடமியின் பாலபுரஷ்கர் விருது பெற்ற கவிஞர் செல்லகணபதி, ஆடிட்டர் நாராயணன், நகரப்பிரமுகர்கள், கல்வி நிலையங்களின் முதல்வர்கள், மருத்துவர்கள் பெருமளவில் பங்கு பெற்றனர்.

**கோவிலூர் பாலிடெக்னிக் கல்லூரிப் பட்டயமளிப்பு விழா**

கோவிலூரில் உள்ள நாச்சியப்ப சுவாமிகள் பாலிடெக்னிக் கல்லூரியின் 6வது பட்டமளிப்பு விழா கோவிலூர் ஆண்டவர் திருமண மண்டபத்தில் நடைபெற்றது. கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் தலைமைவகித்து ஆசியுரை வழங்கினார். கல்லூரி முதல்வர் மாயாண்டி வரவேற்றுக் கல்லூரி அறிக்கையினைச் சமர்ப்பித்தார். மதுரை கே.எல்.என். பொறியியல் கல்லூரிப் பேராசிரியரும் அமைப்பில் துறைத்தலைவருமான டாக்டர் ஏ.எஸ்எஸ். சேகர் மாணவ மாணவியருக்குப் பட்டயங்களை வழங்கிப் பட்டமளிப்பு விழா உரை ஆற்றினார். துறைத்தலைவர்கள், சாமிநாதன், கதிர்வேல், திருமதி ஜெயா, சண்முகநாதன் ஆகியோர் தத்தம் துறை மாணவர்களைப் பட்டயம்பெற அழைத்தனர். இப்பட்டயமளிப்பு விழாவில் 129 பேருக்குப் பட்டயம் வழங்கப்பட்டது. கோவிலூர் மடாலயக் கல்வி ஆலோசகர் டாக்டர் குமரப்பன், முதல்வர்கள் டாக்டர் செல்லப்பா, டாக்டர் ரவீந்திரன், திருமதி மணிமொழிமோகன், திருமதி மணிமொழிமுருகன் மற்றும் பெற்றோர்கள், நகர பிரமுகர்கள் கலந்து கொண்டனர்.

**கோவிலூர் கல்விநிறுவனங்களில் ஆசிரியர் தினவிழா**

கோவிலூர் மடாலயத்தின் சனாதனதர்ம அறநிலையால்

நடத்தப்படும் கல்விநிறுவனங்கள் இணைந்து ஆசிரியர் தினவிழாவைக் கொண்டாடின. கோவிலூர் ஆதீனம் மெய்யப்பசுவாமிகள் தலைமைவகித்து ஆசியுரை வழங்கினார். காரைக்குடி அழகப்பா அரசு கலைக் கல்லூரி வேதியல் துறைமேனாள் பேரா. டாக்டர். சையது முகம்மது ஆசிரியர் தின உரைஆற்றினார். தமிழ்நாடு உடற்பயிற்சிப் பல்கலைக் கழகத்தின் மேனாள் துணைவேந்தர் டாக்டர். வைத்தியநாதன் மடாலயக் கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர். குமரப்பன் ஆகியோர் நல்லாசிரியர் விருது பெற்ற ஆசிரியர்களைப் பாராட்டிப் பேசினர். நல்லாசிரியர் விருது பெற்ற எஸ்.எம்.எஸ் பள்ளி ஆசிரியர் சுந்தர்ராமன் மதுரை மாநகராட்சிப் பள்ளி தலைமை ஆசிரியை தனேஸ்வரி ஆகியோர் கவுரவிக்கப் பெற்றனர். நாச்சியப்பசுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி முதல்வர் டாக்டர். செல்லப்பா வரவேற்றார். கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக் மேல்நிலைப்பள்ளி துணை முதல்வர் திருமதி. வள்ளியம்மை நன்றி கூறினார். ஆசிரியர்களுக்குப் பல்வேறு போட்டிகள் நடத்திப் பரிசுகள் வழங்கப்பெற்றன. பேரா. கார்மேகம் நிகழ்ச்சிகளைத் தொகுத்து வழங்கினார். கோவிலூர் மடாலயக் கல்வி நிறுவனங்களின் முதல்வர்கள் டாக்டர். ரவீந்திரன் மாயாண்டி திருமதி. மணிமொழி முருகன் மற்றும் பலர் பங்கு பெற்றனர்.

### மாண்டிச்சோரிக் கல்விக்கான கையேடு வெயியீடு

மாண்டிச்சோரிக் கல்வி உலகில் உள்ள சிறந்த கல்வி முறைகளில் ஒன்று. உலகம் முழுதும் பல்வேறு நாடுகளில் இக்கல்வி முறை பின்பற்றப்பட்டு வருகிறது. இக்கல்வி முறை குறித்து பெர்த் ஆப் நியூ எஜிகேட்டர் எனும் கையேடு வெளியீட்டு விழா கோவிலூர் மடாலயத்தில் கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் தலைமையில் நடைபெற்றது. மாண்டிச்சோரியில் உள்ள விருட்சா பவுண்டேசனும் கோவிலூர் மடாலயமும் இணைந்து இவ்விழாவை நடத்தின. விருட்சா பவுண்டேசன் இயக்குநர் சங்கர் வரவேற்றார். நடுவண் அரசின் இந்திராகாந்தி அணுசக்தி ஆய்வுக்கூட விஞ்ஞானி டாக்டர். வெங்கடேசன் கையேட்டை வெளியிட்டுப் பேசினார். கோவிலூர் ஆதீனம் பேசுகையில் மாண்டிசோரிக் கல்வி முறையை உருவாக்கியவர் மாண்டிசோரி

இத்தாலிய டாக்டராவார். இவர் 1939ம் ஆண்டு சென்னைக்கு வந்து மாண்டிச்சோரிக் கல்வி முறையைப் பரப்பினார். 1941 முதல் நான்கு ஆண்டுகள் கோவிலூர் மடாலயத்தின் 12வது மடாதிபதி நாச்சியப்ப சுவாமிகள் தனி உதவியாளராக இருந்து மாண்டிச்சோரி அம்மையாருடன் பல நாடுகளுக்குப் பயணம் செய்து மாண்டிசோரி அம்மையார் கூறிய கருத்துக்களையெல்லாம் சேகரித்துப் புத்தகங்களாக்கினார். நாச்சியப்ப சுவாமிகள் கோவிலூர் மடாலயத்தின் கலாஷேத்ரா பப்ளிகேஷன்ஸ் மூலம் 16 நூல்களை வெளியிட்டார். உலகம் முழுவதும் மாண்டிச்சோரிக் கல்விக்கான நூல்கள் கோவிலூர் மடாலயத்திலிருந்து அனுப்பப்பட்டு வருகிறது. மேலும் நாச்சியப்ப சுவாமிகள் சென்னையில் மாண்டிச்சோரி மாதிரிப்பள்ளியைத் தொடங்கச் செய்தார். உலகம் முழுவதும் மாண்டிச்சோரிக் கல்வி செயல்பட நூல்கள் வாயிலாக உதவியவர் நாச்சியப்ப சுவாமிகள் எனப் பேசினார். விருட்சா பவுண்டேசன் துணைத்தலைவர் குமார் வாழ்த்துரை வழங்கினார். மடாலயக் கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர். குமரப்பன் மடாலயக் கல்வி நிறுவினங்களின் முதல்ர்கள் டாக்டர். செல்லப்பா, டாக்டர். ரவீந்திரன், மாயாண்டி, மணிமொழிமோகன், மணிமொழிமுருகன் மற்றும் ஆசிரியர்கள், மாண்டிச்சோரிப் பள்ளி நிர்வாகிகள் பங்குபெற்றனர்.

### முதலாம் ஆண்டு மாணவர்களுக்கு வரவேற்பு விளையாட்டு விழா

கோவிலூர் ஆண்டவர் உடற்பயிற்சிக் கல்லூரியில் பி.பி.இ, பி.பி.எட், எம்.பி.எட், வகுப்புகளில் சேர்ந்த முதலாம் ஆண்டு மாணவர்களை வரவேற்கும் வகையில் இரண்டாம் ஆண்டு மூன்றாம் ஆண்டு பயிலும் மாணவ மாணவியர் இணைந்து விளையாட்டுப் போட்டிகளை நடத்தினர். காலை 7.00 மணி முதல் மாலை 5.00 மணி வரை நடைபெற்ற பல்வேறு போட்டிகளில் முதலாமாண்டு மாணவர்கள் பங்கு பெற்றுத் திறமையைக் காண்பித்தனர். வெற்றி பெற்ற முதலாமாண்டு மாணவர்களுக்கான பரிசளிப்பு விழா கல்லூரி முதல்வர் டாக்டர். ரவீந்திரன் தலைமையில் நடந்தது. கோவிலூர்

ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் பரிசுகளை வழங்கினார். கோவிலூர் மடாலயக் கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர். குமரப்பன், கல்லூரி முதல்வர்கள் டாக்டர். செல்லப்பா, மாயாண்டி ஆகியோர் கலந்து கொண்டனர்.

## திருவிளையாடற்புராணம் (தொடர்ச்சி)

### வருணன் விட்ட கடலை வற்றச் செய்தது

சித்திரா பௌர்ணமி தோறும் அபிஷேக பாண்டியன் சொக்கலிங்கப் பெருமானுக்கு அதி விசேஷமான பூஜைகளைச் செய்து கர்பூர சுந்தரேசா ! என்று சொல்லித் துதி செய்வான். அதே சித்ரா பௌர்ணமி இரவிலேதான் இந்திரனும் பூஜை செய்ய வருவது வழக்கம். அபிஷேக பாண்டியன் பூஜை செய்து முடிக்கும் வரையிலும் தாமதித்துக் காத்திருந்து பிற்பாடு தன் பூஜையை முடித்துச் செல்லவேண்டிய தாயிற்று.

ஒரு வருஷம் இப்படி நடந்த சமயத்தில் வருணன் இந்திரனைப் பார்க்கச் சென்றான். தேவேந்திரா! இன்று நீ வருத்தத்தோடு இருக்கக் காரணம் என்ன? என்று கேட்டான். மதுரைச் சொக்கநாதரைப் பூஜை செய்வதிலே பாண்டியனால் தாமதம் ஏற்பட்டுவிட்டது அதனால்தான் கொஞ்சம் கவலை என்றான் இந்திரன். சொக்கலிங்கம் தான் எல்லா லிங்கங்களைக் காட்டிலும் சிறந்ததோ? என்று கேட்டான் வருணன். உடனே இந்திரன் வருணா ! அன்று என்னுடைய பிரம்மஹத்தி தோஷத்தையும், வெள்ளையானையின் சாபத்தையும் போக்கி அருள் புரிந்தது சொக்கலிங்க மூர்த்திதானே? இது உனக்குத் தெரியாதா? என்றான். அப்படியானால் என்னை வருத்தப்படுத்துகின்ற பெரிய வயிற்று நீர்நோயைச் சொக்கலிங்கம் தீர்த்துவைப்பாரா? என்று கேட்டான் வருணன். பிறவி நோயைத் தீர்க்கவல்ல சிவபெருமான் உனது வயிற்று நோயையா தீர்க்கமாட்டார்? வேண்டுமானால் எம்பெருமானின் சக்தியைச் சோதித்துப் பார். பிறகு அவரது திருவிளையாடலை நீயே நன்றாகத் தெரிந்து கொள்வாய் என்று பதில் சொன்னான் இந்திரன். வருணன் விடைபெற்றுச் சென்றான்.

மதுரைச் சொக்கலிங்கப் பெருமானின் திருவிளையாடலைக் கண்டு தன்னுடைய வயிற்று நீர்வியாதியை ஒழித்துவிட எண்ணினான் வருணன். உடனே கடலைக் கூப்பிட்டு மதுரை நகரத்தை அழித்து வரும்படியாக ஏவிவிட்டான். கடல் குமுறிக்கொண்டு பொங்கி எழுந்தது. ஆரவாரம் செய்து மரங்களை வேரோடு பிடுங்கி வீசி எறிந்தது.

பிரளய காலமே வந்துவிட்டதோ என்று எண்ணும் படி சூழ்ந்து வந்தது கடல். வருணனது சூழ்ச்சியைத் தெரிந்துகொள்ள மாட்டாத தேவர்கள் பிரம்ம கல்பத்திலும் அழிவடையாத மதுரையம்பதியும் அழிவடைந்து விடுமோ என்று பயந்தனர். கலக்கமடைந்த மனதோடு சோமசுந்தரக் கடவுளை வணங்கினார்கள். மதுரை மக்கள் இது சொக்கநாதர் திருவிளையாடலா? அல்லது நாம் செய்த பாவத்தின் பலனோ என்று மனம் தடுமாறினார்கள் அபிஷேக பாண்டியனும் செய்வது இன்னது என்று புரியாமல் திருக்கோவிலுக்குள் சென்று எம்பெருமான் திருவடிகளே புகல் ஓலம், ஓலம் என்று கதறினான்.

உடனே சோமசுந்தரக்கடவுள் முன்தோன்றி பயப்பட வேண்டாம் பாண்டியா ! என்று புன்னகையுடன் மொழிந்தருளினார். பிறகு தன்னுடைய ஜடா மகுடத்திலிருந்த நான்கு மேகங்களையும் பார்த்து, நீங்கள் விரைவாகச் சென்று மதுரை நகரத்தை அழிக்க வந்துகொண்டிருக்கும் கடலை அது வற்றிப்போகும் படிக்கு நன்றாக உறிஞ்சிவிடுங்கள் என்று ஆணையிட்டருளினார்.

மேகங்கள் நான்கும் எழுந்து முழங்கிப் புறப்பட்டன. சென்று பொங்குமாங்கடலை வற்றிப்போகும்படி நீரை உறிஞ்சிக் குடித்துவிட்டன. நீர் வற்றிய கடல் சிவபெருமானே முழு முதற் காரண புராதனன் என்று தெளிவாகத் தெரிந்துகொண்டது. மதுரை நகரம் பிழைத்தது.

தேவர்கள் அபிஷேக பாண்டியன், நகர மக்கள் எல்லாரும் சோமசுந்தரக் கடவுளிடம் திருவிளையாடலைப் பாராட்டியவாறு மிகுந்த சந்தோஷத்துடன் தங்கள் இடம் சென்றனர்.



**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**